REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 65630

# நம் நாடு

தி. மு. க. தினஇதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily ✱ The Official Organ Of The D.P.F.

## 'கை இராட்டை' போய் 'மின் இராட்டை' வருகிறது!

புதுடில்லி, செப். 15—

சிறந்த இராட்டை ஒன்றினைக் கண்டுபிடித்துத் தருவோருக்கு ஒரு இலட்சம் ரூபாய் பரிசுதரப்படும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

இப்போது, அந்தப் பரிசுக்குரியது என்று ஒரு இராட்டை கண்டு பிடிக்கப்படுமானல்—அது, கையால் உபயோகிக்கக்கூடியதாக மட்டுமிருந்தால் போதாது என்றும், சிறிது மின்சக்தியை உபயோகித்து இயக்கக் கூடியதாகவும் இருக்கவேண்டுமெனவும் அறிவிக்கப்பட்டிருக்கிறதாம்!

மலர் 4] சென்னை: ஆவணி 2௦ திங்கள் (17—9—56) ★ ★ வெளியூர்: புரட்டாசி 3௨ செவ்வாய் (18—9—56) [இதழ் 84

# விலங்கை ஒடிப்போம்-விடுதலை பெறுவோம்!

## எழுச்சி பெற்ற தென் பாண்டி மண்டல மக்கள் சூளுரை

### மதுரையில் வரலாறு காணாத விடுதலை விழா

### நகரெங்கும் எழில்மிகு காட்சிகள்

### ஐம்பதினாயிரம் பேர் பங்கு கொண்ட மாபெரும் ஊர்வலம்

### இலட்சம் மக்கள் திரண்ட பொதுக்கூட்டம்

### அண்ணா, நெடுஞ்செழியன், நடராசன், கருணாநிதி முழக்கம்

(நமது நிருபர்—டிரங்க் போன் மூலம்)

மதுரை, செப். 17—

திராவிட நாடு விடுதலை விழா மதுரை நகரில் இதுவரை அதன் வரலாற்றில் வேறெந்த நிகழ்ச்சியின்போதும் இல்லாதவகையில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டிருக்கிறது.

விழா நிகழ்ச்சிகள் படைத்த எழிற் காட்சிகள், தென் பாண்டிமண்டல மக்களின் எழுச்சிக்குச் சான்று பகர்ந்தன.

மதுரை நகரில், விழாக்கோலம்பூணாத தெருவே இல்லையெனலாம்! ஒவ்வொரு வட்டாரத் தோழர்களும் போட்டியிட்டுக்கொண்டு, வீதிகள் அனைத்தையும் கழகக் கொடிகளாலும், தோரணங்களாலும், விடுதலை முழக்கங்கள் பொறித்த வளைவுகளாலும் அலங்கரித்திருந்தனர்.

கடந்த ஒரு கிழமைக்கு மேலாகவே, விழாவினை ஒட்டி நகரில் செய்யப்பட்டுவந்த ஏற்பாடுகள் மக்களிடை ஒரு பரபரப்பையூட்டி யிருந்தன.

16—9—56 காலையில்எழுந்த கதிரவன் விழாக் கோலத்துடன் பூத்துநின்ற புதியதோர் மதுரையைக் கண்டான்.

விழித்தெழுந்த மக்கள், தங்களில் விழிப்புப் பெற்றோரின் இதயகீதம் நகரெங்கும் ஒலித்துக் கொண்டிருந்ததைக் கண்டனர்.

'திராவிட நாடு திராவிடருக்கே,' 'வீறு கொண்டெழுவோம்—விடுதலை பெறுவோம்' 'வடவர்பூட்டிய அடிமை விலங்கொடிப்போம்-சுதந்திர வாழ்வு பெறுவோம்' என்பனபோன்ற வீர வரிகள் பொறிக்கப்பட்ட அட்டைகள் ஊரெங்கும் — தெருவெங்கும் காட்சி தந்து கொண்டிருந்தன.

காலையிலேயே கொடியேற்றுவிழா துவங்கிற்று; தோழர் மு. கருணாநிதி அவர்கள் நூற்றுக்கணக்கான இடங்களில் கழகக் கொடியை ஏற்றுவித்தார். அந்த நிகழ்ச்சிகளில் எல்லாம் மக்கள் பெரும் அளவில் கலந்துகொண்டு தங்கள் ஆர்வத்தைக் காட்டிக்கொண்டனர்.

மாலை 4 மணிக்கு, பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் தோழர் மு. கருணாநிதி ஆகியோர் சிறப்பாக அழகுபடுத்தப்பட்டிருந்த கார் ஒன்றில் அமர்த்தப்பட்டு, நகரின் முக்கிய வீதிகள் வழியாக ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர்.

ஐம்பதினாயிரத்திற்கும் அதிகமான மக்கள் கலந்துகொண்ட அந்த ஊர்வலத்தை நூற்றுக் கணக்கான கழகத் தோழர்கள், தோழர் எஸ். முத்து அவர்கள் தலைமையில் முன்னின்று அணிவகுத்து நடத்திச் சென்றனர்.

ஊர்வலம் நகரின் முக்கிய வீதிகளில் வந்தபோது இரு மருங்கிலும் திரண்டு நின்ற எண்ணற்ற மக்கள் காட்டிய உற்சாகமும் எழுப்பிய பேராரவாரமும் மாற்றுரை மருள வைப்பதா யிருந்தன.

'வடநாட்டு ஏகாதிபத்திய வாதிகளின் பிடியிலிருந்து தாயகத்தை—திராவிடத்தை மீட்போம்' என்ற சூளுரை, ஊர்வலத்தில் கலந்து கொண்ட ஒவ்வொருவராலும் மேற்கொள்ளப்பட்டது எனலாம். அவர்கள், 'திராவிட நாடு திராவிடருக்கே' என்று விண்ணதிர எழுப்பிய முழக்கம் தாயக விடுதலைக்கான சூளுரைதானே!

இத்தனை சிறப்புகளுடன் நகரின் தெருக்களில் நகர்ந்து வந்த ஊர்வலம், ஏற்கனவே பல்லாயிரக் கணக்கான மக்களால் நிரம்பிவிட்ட திலகர் திடலை அடைந்துகொண்டிருந்த போது, அண்ணா அவர்களும், துணைப்பொதுச் செயலாளர் என். வி. நடராசன் அவர்களும் வந்து சேர்ந்தனர். அப்போது அண்ணா அவர்களைக் கண்ட மகிழ்ச்சிப் பெருக்கால் பேராரவாரம் செய்த மக்களைக் கண்டவை மட்டுமே கண்களாம்!

ஊர்வலம், திலகர் திடலில் திரண்டிருந்த மக்கள் வெள்ளத்தில் சங்கமமான காட்சி கண்கொள்ளாததாக இருந்தது!

தென்பாண்டி மண்டல மக்கள் பெற்றுவரும் விடுதலை எழுச்சிக்குச் சான்று பகர்வதாயிருந்தது, திலகர் திடலில் மாலை 7-30 மணியளவில் துவங்கிய கூட்டம்!

விடுதலை நாள் நிகழ்ச்சிகளுக்ெகல்லாம் சிகரம் வைத்ததைப் போன்றிருந்த அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்ட மக்களின் எண்ணிக்கை ஒரு இலட்சத்திற்கும் அதிகமாகும்.

ஆர்வம் பொங்க, உணர்ச்சி மேலிட, விடுதலைத் துடிப்போடு கூடியிருந்த மக்களிடை அண்ணா அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு வரலாற்றுச் சிறப்புக்குரிய ஒரு விடுதலை முழக்கமாகும்.

மதுரை மாவட்ட தி. மு. க. செயலாளர் தோழர் முத்து அவர்கள் தலைமையில் நடைபெற்ற அந்தக் கூட்டத்தில் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன், தோழர் மு. கருணாநிதி முதலியோரும் உணர்ச்சியூட்டும் கருத்து நிறைந்த சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

இரவு கூட்டம் முடிவுற்ற பின்பு நகரின் பல பகுதிகளிலும் இசை நிகழ்ச்சிகள், சிறு சிறு நாடகங்கள் எல்லாம் நடைபெற்றிருக்கின்றன.

சமீபகாலத்தில் மதுரை நகரில் வேறெந்த நிகழ்ச்சியிலும் இதுபோன்று இலட்சம் மக்கள் கலந்துகொண்டதில்லை என்பதுடன், இத்தனை ஆர்வத்தையும் எழுச்சியையும் காட்டியதில்லை என்பதும், நகரில் நடைபெற்ற திராவிட நாடு விடுதலை விழாவின் மற்றுமொரு சிறப்பாகும்.

## நேருவின் ஏகாதிபத்தியவாதம்!

### தனிநாடு கோரிக்கையை நாகர்கள் கைவிட்டுவிட வேண்டுமாம்

### அப்போதுதான் அவர்களின் ஆலோசனையைக் கேட்பாராம்!

புதுடில்லி, செப். 10—

நாகர்கள் தங்களின் தனிநாடு கோரிக்கையைக் கைவிட்டுவிட்டால் அவர்களைக் கலந்தாலோசித்தே, நாகர் பிரதேச அமைப்பில் மாறுதல் தேவைப்பட்டால் செய்து தருவதாக பண்டிதநேரு கூறினாராம்.

நாகர் தேசியக் கவுன்சிலைச் சேராத சிலர், நாகரின் சார்பில் நேருவைப் பேட்டி கண்டபோது தான், பண்டித நேரு அப்படிக் கூறினாராம்!

தூதுக் குழுத் தலைவரான ஜாசோக்கி எனபாரிடம் இந்தத் தகவலைக் கூறிய நேரு பண்டிதர், எதற்கும், துவக்கத்தில் நாகர் மலைப் பிரதேசத்தில் அமைதி நிலை காட்டப்பட வேண்டும் என்றும், நாகர்கள் பலாத்கார நடவடிக்கைகளுக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும் என்றும் கூறினாராம்.

சந்திப்பு ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள உதவியதாகத் தூதுக் குழுத் தலைவர் கூறினாராம்.

தீவிர நாகர்களை வேட்டையாடுவதற்கு சர்க்காருடன் ஒத்துழைக்கிற சில நாகர்களின் தலைவர்கள் தான் இந்தத் தூதுக் குழுவினர் என்பதால், இந்தக் குழுவினரின் கருத்து பெரும்பான்மையான நாகர்களின் கருத்தைப் பிரதிபலிப்பதாகாது என்று பார்வையாளர்கள் கருதுகின்றனர்.

## வெற்றி—தோல்வியை அறிய குழுவாம்!

புதுடில்லி, செப். 16—

முதலாவது ஐந்தாண்டு திட்டகாலத்தில் பின் தள்ளப்பட்ட வகுப்பினரின் முன்னேற்றத்துக்காக செய்யப்பட்ட வேலைகள் எந்த அளவில் வெற்றிபெற்றுள்ளன என்பதையறிய ஒரு மத்தியக் குழுவை அமைக்க இந்திய அரசாங்கம் யோசித்து வருவதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

## சென்னைக்கு என்ன?

இந்தியாவில், குடிசைத்தொழில் ரீதியில் 37 நீக்குச்சித் தொழிற்சாலைகள் இருக்கின்றனவாம்!

இவைகளில் 14 தொழிற்சாலைகள் பம்பாயிலும் சௌராஷ்டிராவிலும், 11 தொழிற்சாலைகள் ஐதராபாத்திலும், 8 தொழிற்சாலைகள் மத்திய பாரத்திலும், 2 தொழிற்சாலைகள் உத்தரப் பிரதேசத்திலும், மேற்கு வங்காளம், திருவாங்கூர் - கொச்சி ஆகியவிடங்களில் ஒவ்வொன்றும் வேலை செய்து வருகின்றனவாம்!

## இலாகாக்கள் வளருகிறது!

புதுடில்லி, செப். 16—

கிராம சிறு கைத்தொழில் முன்னேற்றத்திற்காக ஒரு தனி இலாகா அமைக்கப்படுமென இந்திய அரசாங்க உற்பத்தி மந்திரி கூறியுள்ளார்.

## டில்லி தருவதாக ஒப்பிய ரூ. 20 கோடி கடன்

### பர்மிய சர்க்கார் பெற்றுக்கொள்ளாது

புதுடில்லி, செப். 15—

கடந்த ஆண்டு அக்டோபர் திங்களில், இந்தியா வழங்குவதாக ஒப்புக்கொண்ட ரூ. 20 கோடி கடனை பர்மா சர்க்கார் பெற்றுக்கொள்ளப் போவதில்லை எனக் கூறப்படுகிறது.

1956 அக்டோபருக்குள் கடனை வாங்கிக்கொள்ள வேண்டும் என்றும், அந்தக் காலத்திற்குள் வாங்கிக் கொள்ளாவிட்டால் கடன் ஒப்பந்தம் காலாவதியாகிவிடும் என்றும் கூறப்படுகிறது. இன்றுவரை அந்தக் கடனைப் பெற்றுக் கொள்வதற்கான முயற்சியை பர்மிய சர்க்கார் மேற்கொள்ளவில்லை என்று கூறப்படுகிறது.

## எவ்வளவு தெரியுமா?

இந்தியாவில் வெளிநாட்டு உல்லாசப் பிரயாணிகள் 1955—56ல் சுமார் ரூ. 10 கோடி மதிப்புள்ள அந்நிய நாணயங்களை இந்திய நாணயங்களாக மாற்றினராம்!

## தீண்டாமையின் அடிப்படை ஆட்டங்கண்டுவிட்டதாம்!

### குடியரசுத் தலைவர் கணக்கு

நாகபுரி, செப். 16—

'தீண்டாமை பிரச்சினை இன்னும் சிறிது காலில் ஒழிந்துவிடும்' என்று குடியரசுத் தலைவர் நம்பிக்கை தெரிவித்துள்ளாராம்! இன்னும் தீண்டாமை ஏதாவது ஒரு உருவில் நிலவிக்கொண்டிருந்தாலும் அதன் அடிப்படை ஆட்டங்கொண்டுவிட்டது என்றும் அவர் கூறினாராம்!

Best copy available.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

நம் நாடு

சென்னை 17—9—'56 திங்கள்

# வெல்க திராவிடம்!

ஏழாண்டு முடிவுற்றது; இன்று எட்டாவது ஆண்டு உதயமாகிறது.

கடந்த ஏழாண்டுக் காலத்தில் நமது முன்னேற்றக் கழகம் ஆற்றியுள்ள பணி ஒவ்வொன்றும், அதன் வளர்ச்சியின் தன்மையையும் தரத்தையும் வரையறுத்துக் காட்டக்கூடியதாகும்.

நமது முன்னணி வீரர்களின் நுண்ணறிவையும், இலட்சியப் பற்றையும், நேர்மைத் திறனையும், உழைப்பின் ஆற்றலையும் மட்டுமே அடிப்படை பலமாகக் கொண்டு நமது கழகம் உதயமாயிற்று.

கண்ணீர் சிந்திய வண்ணம் தோன்றியது. அதனையே காரணப் பெயராகக்கொண்டு நமது கழகமும் ஓங்கி வளர்ந்துவருகிறது.

தூற்றினவர் துயருற, ஏளனம் பேசினவர் ஏமாற்றமுற, எதிரிகளும் கண்டு ஏக்கமுறும் வகையில் நமது கழகம், தினம் தினம் இலட்சியப் பாதையில் விரைந்து சென்றுகொண்டு இருக்கிறது.

திராவிடத் திருநாட்டை வடவர் ஏகாதிபத்தியப் பிடியிலிருந்து விடுவிப்பது — வாழ்க்கைத் துறைகள் பலவற்றுள்ளும் ஏற்பட்டுள்ள இடுக்கண்களைக் களைந்தெறிந்து திராவிட மக்களுக்கு உரிமையுடன்கூடிய நல்வாழ்வைத் தேடித்தருவது —இவை இரண்டும் இருகண்ணெனத்தகும் நமது கழகத்தின் இருபெரும் இலட்சியமாகும்.

தோன்றியகாலை, குந்த நிழலில்லை; கொள்கையைத் தாங்கிச் செல்லச் சொந்தத்தில் ஏடில்லை; இதனை உடனடியாக நிறைவேற்றிக்கொள்ளத் தேவைப்படும் நிதியும் இல்லை.

இருந்ததெல்லாம் கொள்கை உறுதி—நினைத்ததை முடிக்க முடியும் என்ற தன்னம்பிக்கை—எல்லாவற்றிற்கும் மேலான தூய இருதயம்.

இடம், ஏடு, பொருள் ஆகிய இம்மூன்றும் இல்லாமை, நமது கழகத்தின் வளர்ச்சியைக் கெடுத்து விடவில்லை. ஆனால் அதற்கு மாறாக, இவ்வில்லாமையே நமது கழகத்தின் வளர்ச்சிக்குப் பெருந்துணையாக இருந்தது.

சொர்ண மாளிகையையும் எண்ணத்திற்கு எழுத்து வடிவம் தரும் ஏடினையும், பெரும் செல்வத்தையும் தோன்றும்பொழுதே உடன் பெற்றுத் தோன்றிய சங்கம், கட்சி, கழகம் எதுவும், சிறந்த குறிக்கோள் எதுவுமின்றி மக்களிடையில் உலாவ முடியாது என்பது வெறும் கற்பனைக் கருத்து அல்ல. நமது கண்முன் இன்றும் அதை வலியுறுத்தும் காட்சியினைக் கண்டு வருகிறோம்.

மக்கள் பேராதரவு மட்டும் இருந்துவிட்டால், இளைஞர்களின் நல்லாதரவு மட்டும் ஏற்பட்டுவிட்டால், சிறந்த குறிக்கோளைக் கொண்ட ஒரு கட்சி மக்கள் கட்சியாக மலரும் என்ற உண்மைக்கு நமது முன்னேற்றக் கழகம் மறுக்க முடியாத ஒரு எடுத்துக் காட்டாகும்.

இதுபோன்றே, இலட்சியம் எதுவுமின்றி, கொள்கைக்குழப்பத்தில் ஒவ்வொரு நாளும் ஈடுபட்டுவரும் எந்த ஒரு கட்சியும் மக்கள் கட்சியாக இயங்க முடிவதில்லை; மக்களும் அதை ஒதுக்கித் தள்ளிவிடுகின்றனர் - என்ற உண்மையை மெய்ப்பித்துக் காட்டுவதற்கான அமைப்புகளும் இருக்கத்தான் இருக்கின்றன.

அத்தகைய அமைப்புகள், மக்கள் ஆதரவை இழந்துவிட்டக் காரணத்தால், சிறுகச் சிறுகச் செத்து வருவதை நாம் காணவும் செய்கிறோம். அவைகளை நம்பிக் கிடப்போர், அவைகளுக்கு மீண்டும் புத்துயிர் மூட்ட மேற்கொள்ளும் தலைகீழ் முயற்சிகளையும் நாம் கண்டு வருகிறோம்.

நமது கழகத்தின் வளர்ச்சியை நாம் நமக்குள்ளாக நன்கு மதிப்பிட்டுக்கொள்ள வேண்டும். அவ்வாறு மதிப்பிட்டு உண்மை உணர நாம் முனையும்முன், நமது எதிர்ப்பின் தன்மையையும் தொன்மையையும், வன்மையையும் பெரும்பான்மை மக்களின் மனப்பாங்கையும் விளக்கமாக ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டும்.

எதிர்ப்பின் இலட்சணத்தை ஆராய்ந்து அறிவதின் மூலம், சென்ற ஏழாண்டுக் காலத்தில் நமது கழகத்திற்கு ஏற்பட்டுள்ள வளர்ச்சி, அதற்காக நாம் கூட்டாகச் செலவிட்ட உழைப்பிற்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியதைக் காட்டிலும் மிகுதியாகக் கிடைத்திருப்பதாகும் என்ற மகத்தான உண்மையை உணர்ந்துகொள்ளுவது சாத்தியமாகும்.

வடவர் ஏகாதிபத்தியத்திலிருந்து திராவிடத் திருநாட்டை விடுவிக்கும் பொறுப்பை நமது கழகம் மூல அரசியல் இலட்சியமாகக் கொண்டிருக்கிறது என்று முன்னரே நாம் குறிப்பிட்டுள்ளோம். இருந்தாலும் அம்மூல அரசியல் இலட்சியத்தில் வெற்றி ஏற்பட்டுவிட்டால் மட்டுமே போதுமானது எனத் திருப்திகொள்ளும் நிலைக்கு நமது கழகம் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டுவிடவில்லை.

திராவிடம் அரசியல் துறையில் பிறருக்கு அடிமைப்பட்டதற்கான உண்மைகளைக் கண்டறிந்து, அக்கேடுகளைக் களைந்தெறியும் சிறந்த அறிவியல் பணிகளில் ஈடுபடுவதையும் நமது கழகம் நடைமுறை வேலைத்திட்டமாகக் கொண்டிருக்கிறது.

மக்களுக்கு இயல்பாக உள்ள உரிமை வேட்கையை, அறிவியல் நோக்கை, சனநாயகப் பண்பை, மூடிக்கிடக்கும் கொடிய மத மயக்கத்திலிருந்து விடுவிக்கும் பொறுப்பானப் பெரும் பணியினையும் நமது கழகம் மேற்கொண்டு செயல்பட்டுவருகிறது.

நமது கழகத்தின் மூல இலட்சியம் புனிதமானது. அதை அடைய நாம் மேற்கொண்டு வரும் முறைகளும் தூய்மையானவை.

நமது புனிதமான இலட்சியமும், அதை அடைய நாம் மேற்கொண்டுவரும் தூய்மையான செயல்முறைகளுமே, சென்ற ஏழாண்டுக் காலமாக நமது கழகத்திற்குப் பேராதரவைத் திரட்டித் தந்திருக்கின்றன. எனவே, வெற்றிதரும் தூய்மையான நடைமுறைகளை இனியும் பின்பற்றி, அப்புனித இலட்சியத்தை அதாவது, திராவிடத் திருநாட்டை விடுவிக்கும் நாட்டுப் பணியை வெற்றியடையச் செய்ய வேண்டும் என, கழக உதய நாளான இன்று நாம் ஒவ்வொருவரும் சூளுரைத்துக் கொள்ளுவோமாக.

கழகப் பெருங்காவலரான அண்ணாவின் அரவணைப்பில், வடவர் ஏகாதிபத்தியப் பிடியிலிருந்து நமது திராவிடத்தை நிச்சயமாக மீட்போம் என, நாம் ஒவ்வொருவரும் கழகம் தோன்றிய இந்நாளில் உறுதி கொள்வோமாக.

வெல்க திராவிடம்!

## சூயஸ் கால்வாய்மூலம் இந்திய வாணிபம்

### 1,240 கோடியாம்!

"1955-56-ல், இந்தியா வெளிநாடுகளுடன் செய்த வாணிபத்தில் ரூ. 1,240 கோடி. சூயஸ் கால்வாய்மூலம் நடந்திருக்கிறது"

என்று இந்திய வாணிப அமைச்சர் கர்மார்கர், மாநிலங்கள் சபையில் குறிப்பிட்டுள்ளார்.

"வெளிநாடுகளிலிருந்து இந்தியாவிற்கு இறக்குமதி செய்யப்பட்டவைகளின் மதிப்பு 1955-56-ம் ஆண்டு 462 கோடி ரூபாயாகும்" என்று மேலும் அவர் அறிவித்தார்.

## 2,000 அகதிகளின் ஆர்ப்பாட்டம்

மத்திய அரசாங்கத்தால் நிறுவப்பட்டுள்ள புதுக்குடி நகரத்தில் வசிக்கும் 2,000 அகதிகள், பாராளுமன்றத்தின் முன்பு ஆர்ப்பாட்டம் செய்தனர் என தெரிய வருகிறது.

தாங்கள் பெற்றுள்ள வசதிகளுக்கு மூன்று தவணைகளில் பணம் செலுத்த வேண்டும் என்று அரசாங்கம் கேட்டுள்ளதை எதிர்த்து இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்றதாம்.

வட்டியில்லாமல் 30 தவணைகளில் செலுத்துவதற்கு அனுமதி தரவேண்டுமென்று அந்த அகதிகள் விரும்புவதாகத் தெரிவிக்கப்பட்டது.

## ஊழல் இருக்காதாம்!

டி. யு. சி. எஸ். கடைகள் மூலம் அரிசி விற்கப்படுவதை விரிவாக்கி, சமூக ஊழியர்களிடமும் சர்க்கார் அரிசி விற்பனைக்குத் தரப்படலாம் எனத் தெரிகிறது.

ஊழலுக்கு இடம் கொடுக்காமல் நியாய விலைக்கு விற்கவே இந்த முயற்சியாம்.

## கரை உடைந்தது— பயிர்கள் நாசமாயிற்று

காவிரி ஆற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு இருக்கிறது. கடலக்குடி என்னும் இடத்தில் கரை உடைந்து, அதன் வழியாகக் காவிரி ஆற்றின் வெள்ளம் வயல்களில் பாய்ந்து பயிர்களை நாசப்படுத்தி இருக்கிறது.

நிலைமையைச் சரிப்படுத்தக் கிராம மக்கள் தீவிரமாக ஈடுபட்டிருப்பதாகத் தெரிகிறது.

## கட்டாய இலவச ஆரம்பக் கல்வி

மத்தியப் பிரதேச மாநிலத்தின் சட்டசபை, பல புதிய சட்டங்களை உருவாக்கியுள்ளது. முக்கியமாக அங்கு கட்டாய இலவச ஆரம்பக் கல்வியளிக்க அரசாங்கம் முடிவு செய்திருப்பது குறிப்பிடத்தக்கது.

# முஸ்லிம் லீக் செத்துவிட்டதாம்!

## அப்படி இருந்தாலும் அதனை அழித்தொழிக்க வேண்டுமாம்!

### பண்டித நேருவின் ஆணவப் போக்கு

"நான் முஸ்லிம் லீக் தலைவருக்குக் கடிதம் எழுதவில்லை. முஸ்லிம் லீக் என்று ஒரு ஸ்தாபனம் இருப்பதாகவே நான் அங்கீகரிக்கவில்லை. அப்படி ஏதேனும் ஒன்று இருந்தால், என்னைப் பொறுத்தவரையில் அதனை நாம் அலட்சியப்படுத்த வேண்டும்; அடக்கி, ஒடுக்கி ஒழிக்க வேண்டும்—சட்டப்படி அல்ல; ஆனால், மக்கள் கருத்தைக்கொண்டு!"

என்று, கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கும்போது ஆணவத்தோடு கூறியிருக்கிறார், பண்டித நேரு.

முகம்மது நபியை இழிவுபடுத்தும் புத்தகம் ஒன்றை, முன்ஷியை ஆசிரியராகக்கொண்ட பாரதீய வித்யபவன் வெளியிட்டதும் அதனைத் தொடர்ந்து சில சம்பவங்கள் நிகழ்ந்ததும் நினைவிருக்கலாம்.

அதனையொட்டி, அலிகார் பல்கலைக் கழக மாணவர்கள் ஏதோ ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட்டதாகவும், அதனை ஏன் சர்க்கார் விசாரணை செய்யக்கூடாது என்றும் மக்கள் சபையில் கேள்விகள் எழுப்பப்பட்டன.

அப்போது இந்த மகா சபையைச் சேர்ந்த ஒரு உறுப்பினர் எழுந்து, பண்டித நேருவைக் கையைக் காட்டி, 'நீங்கள் என்ன செய்தீர்கள்? முன்ஷியின் திருஉருவப் பொம்மையைச் செருப்பால் அடித்துத் தீக்கொளுத்துகிற சம்பவங்கள் நடைபெறுகின்றனவே! நீங்கள் என்ன செய்தீர்கள்? முஸ்லிம் லீக் தலைவருக்குக் கடிதம் எழுதினீர்களே, புத்தகத்தைக் கண்டித்து; அப்போது, இந்தச் சம்பவங்களைக் கண்டித்தும் ஏன் எழுதவில்லை?' என்று கேட்டாராம்!

அதற்குப் பதிலளிக்கும்போதுதான் பண்டித நேரு, தான் ஜனநாயகத்திற்கு எத்தனை தூரம் மதிப்பளிப்பவர்—எதிர்க்கட்சிகளைப் பற்றி, எப்படிப்பட்ட கருத்துக்கொண்டவர் என்பதை எல்லாம் விளக்குகிற வகையில், மேற்கண்ட ஆணவமான பதிலைக் கூறினாராம்.

மேலும் அவர் கூறினாராம்:— "முஸ்லிம் லீக் செத்துவிட்டது; அண்டை நாட்டில் (பாகிஸ்தானில்)கூட அது உயிரோடு இல்லை. அப்படியிருக்க, இந்தியாவில் யாரோ சிலர் முஸ்லிம் லீக் கொடியை பறக்கவிடுவது வியக்கத்தக்கதாயிருக்கிறது."

## நேரு எகிப்துபோகிறாராம்!

இலங்கை முதலமைச்சருடன் எகிப்து சென்று, சூயஸ் கால்வாய் விஷயமாக நாசருடன் கலந்துபேச பண்டித நேரு செல்வாராம்.

# எதிர் கட்சிகள் பற்றி பெரிய மனிதரின் தரக் குறைவான கருத்து!

இலங்கை வாழ் தமிழரின் இன்னல் குறித்து தென்னாட்டு மக்களின் கவலையை நேரு பெருமானுக்கு எடுத்துரைப்பதற்காகத் தோழர் டி. அவினாசிலிங்கம் (செட்டியார்) தலைமையில் சில தென்னாட்டு காங்கிரஸ் எம். பி.-க்கள் நேருவைச் சந்தித்தனராம்.

பண்டித நேருவோ, இவர்கள் கூறுவதைக் கேட்டுவிட்டு, 'தமிழ் மொழி, இந்தியக் குடியுரிமை பற்றிய பிரச்சினைகள் இலங்கையின் பொருளாதார நிலையை அடிப்படையாகக் கொண்டவை; எனவே, அவற்றை இந்தியா சிநேக பாவத்துடன் அணுக வேண்டும்' என்று கூறினாராம்!

தூதுக் குழுவினர், இந்தப் பிரச்சினைகளில் காங்கிரஸ் உறுதியான நடவடிக்கை எடுக்கவில்லை என எதிர்க் கட்சிகள்—குறிப்பாகத் திராவிட முன்னேற்றக் கழகம், திராவிடக் கழகம், கம்யூனிஸ்டுக் கட்சி ஆகியவை குறை கூறுவதாக முறையிட்டனராம்.

அதற்கு நேருவோ, 'இந்த இயக்கங்கள் எல்லாம், பிரச்சினைக்குப் பரிகாரம் வேண்டும் என்ற விருப்பத்தினால் அப்படிக் கூறுவதில்லை; இக்கட்டான நிலையில் அரசியல் முதலெடுக்க விரும்புகின்றன' என்று கூறிவிட்டாராம்!

## பதவியை விட்டு விலகிவிடுவாராம்!

புதுடில்லி, செப் 14—

பம்பாய் முதன் மந்திரி மொரார்ஜி தேசாய், வரும் நவம்பர் மாதத்தில் புதிய பெரிய இருமொழி பம்பாய் மாநிலம் அமையும் போது தொடர்ந்து முதன் மந்திரியாக இருக்கமாட்டார் என்றும், அவர் எவ்வளவு சீக்கிரம் பதவியிலிருந்து விலகிவிட முடியுமோ அவ்வளவு சீக்கிரம் விலகிவிடவே விரும்புகிறார் எனவும் கூறப்படுகிறது.

மொரார்ஜியை மத்திய ஆட்சிக்குக் கொண்டுவந்து விட வேண்டும் என்று ஏற்கனவே முயற்சிகள் இருப்பது தெரிந்ததே!

மொரார்ஜி விலகிவிட்டால் இப்போது உள்நிர்வாக இலாகா மந்திரியாக இருக்கும் ஒய். பி. சாவன் பம்பாய் முதன் மந்திரியாகக் கூடும் என பார்வையாளர் கருதுகின்றனராம்.

## சுரங்கத்தில் விபத்து: நான்கு பேர் இறந்தனர்

பீகார் மாகாணத்தில் உள்ள லோத்னா நிலக்கரிச் சுரங்கத்தில் தண்ணீர் தேக்கப்பட்ட இடத்திற்கு அருகாமையில் வேலை செய்துகொண்டு இருந்த நான்கு தொழிலாளர்கள், திடீரென நிலக்கரி சரிந்த காரணத்தாலும், தண்ணீர் அவர்கள் பக்கம் பாய்ந்த காரணத்தாலும் மூழ்கடிக்கப்பட்டனர் என்று தெரியவருகிறது.

## கட்டிட நிர்மாணக் கலை படிப்பு

மத்திய அரசாங்கமும், சென்னை அரசாங்கமும் அளிக்கும் பண உதவியைக் கொண்டு கட்டிட நிர்மாணக் கலைப் படிப்பை ஆரம்பிக்கப் போவதாக சென்னை பல்கலைக் கழகத்தவர் தெரிவித்துள்ளனர்.

## வடாற்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களுக்குக் கோதாவரி தண்ணீர்

கோதாவரி நதிமீது தென்னிந்தியா அணைக்கட்டு ஒன்று கட்டுவதற்கான திட்டத்தை இந்த ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் தயாரித்து, அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் வேலை துவக்க முயற்சி செய்தால், அந்தத் திட்டம் ஆந்திர அரசின் அனுமதியைப்பெற தான் ஆதரிக்கத் தயார் என்று ஆந்திர அமைச்சர் சஞ்சீவி அறிவித்துள்ளார்.

இத்திட்டத்திலிருந்து சென்னை நகரத்திற்குக் குடி தண்ணீரும், வடாற்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களுக்குத் தண்ணீர் வசதியும் கிடைக்கும்.

One side of the page is dark



# நேருவின் 'ஏக இந்தியா' வேடம் கலைகிறது!

## 'உருக்கு ஆலைகளை தென்னாட்டில் அமைக்கமாட்டோம்'

### 'மத்திய இந்தியாவிலேயே அமைப்போம்'

மாநிலங்கள் சபையில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் குறித்து பண்டித நேரு பேசுகையில், 'இந்தியாவில் பெரிய உருக்குத் தொழிற்சாலைகளை ஏற்படுத்தவேண்டியிருக்கிறது' என்று குறிப்பிட்டார்.

உடனே தென்னாட்டு உறுப்பினர் ஒருவர், 'அத்தொழிற்சாலைகளில் ஒன்று தென்னாட்டில் அமைக்கப்படுமா?' என்று கேட்டதற்கு, பண்டித நேரு, 'மத்திய இந்தியாவில் தான் அமைக்கப்படும்' என்று பதிலளித்ததாகச் செய்தி ஒன்றில் கூறப்பட்டுள்ளது.

## சுலபமாகப் பேசிவிட்டார் நேரு!

"நம் நாட்டின் வளத்தை அதிகப்படுத்திக் கொள்வதற்கும், முக்கியமாக நாம் வாழவும் புதிய முறைகளைக் கையாள வேண்டியுள்ளது.

"பிற்போக்கு நாட்டைப் பற்றி இந்த உலகம் பெரும்பாலும் கவனிப்பதில்லை. நாளுக்கு நாள் நாம் மிகத்தாழ்ந்த—அவலமான நிலையை அடையாது, உன்னத நிலையை அடையவும், மக்களுடைய குறைகளைக் களைந்தெறியவும் பாடுபட வேண்டும்,"

என்று பண்டித நேரு, மாநிலங்கள் சபையில், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைக் குறித்துப் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பிறகு இந்தியா மிகவும் முன்னேற்றமடைந்து விடுமாம்!

எல்லாத் தொழில்களைக் காட்டிலும் உழவுத் தொழிலில் முன்னேற்றமடைந்து, மக்களின் தேவைக்குப் போக அதிகப்படியான உணவுப் பொருள்களை வெளிநாடுகளிடமிருந்து இந்தியா பெற்ற இயந்திர சாதனங்களுக்கு ஈடு செய்யக்கூடிய அளவிற்கு உற்பத்தியில் வேகமாக முன்னேற்றமடையுமென அவர் நம்புகிறாராம்!

இந்த நாட்டில் ஏதாவது சாதிக்க வேண்டுமென்றால், அது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக முடிப்பதுதான் என்றும், இத்திட்டம் இந்த நாட்டின் வறுமைக்கு எதிரிடையாகத் துவக்கப்பட்ட போராட்டம் என்றும், இந்தப் போராட்டத்தில் வெற்றி பெறுவதே மிகச் சிறந்த வெற்றி என்றும் பேசி முடித்துவிட்டார்!

## உள் நிர்வாக அமைப்பு

### திருத்துவதுபற்றி வெள்ளை அறிக்கையாம்

உதகமண்டலம், செப் 14—

"உள் நிர்வாக அமைப்புகளைத் திருத்தி அமைக்கிற ஏற்பாடு குறித்த வெள்ளை அறிக்கை ஒன்றை சென்னை சர்க்கார் சீக்கிரமே வெளியிட இருக்கிறார்கள்"

என்ற தகவலை மந்திரி இராமசாமி வெளியிட்டிருக்கிறார்.

நகர சபைகளையும் மாவட்டக் கழகங்களையும் திருத்தி அமைப்பதற்கான குழுக்களின் சிபாரிசுகளை மனதில் கொண்டு, நிர்வாகத் துறையினரின் வேலைகளைச் சரிவரக் கண்காணிப்பதற்கான வகையில், நகர சபைத் தலைவர்களின் அதிகாரங்களை விரிவாக்குவது பற்றி வெள்ளையறிக்கை விளக்கம் தருமாம்.

## தொகுதி நிர்ணயக் குழு சென்னை வருகை

இம்மாதம் 20-ந் தேதியன்று, மத்திய அரசாங்கத்தின் தொகுதி நிர்ணயக் குழு சென்னை வருகிறது. புதிய கேரள தொகுதிகளைப்பற்றி சென்னையில் முடிவு செய்யப்படுமாம்.

## புளித்துப்போன பேச்சு

### கேட்டுச் சலித்துப்போன உறுதிமொழி

நாகபுரி, செப். 13—

"எந்த வட்டார மொழிக்கும் தீங்கு ஏற்படும் வகையில் இந்தியைப் பரப்பக்கூடாது என்பதை மனதில் கொள்ளவேண்டும்"

என்று, இந்தியக் குடியரசுத் தலைவர் இராசேந்திர பிரசாத், ராஷ்டிர பாஷா பிரசார சமிதி கட்டிடத்தின் துவக்க விழாவில் தெளிவாகக் குறிப்பிட்டார்.

மேலும் அவர் பேசுகையில், 'இந்திய மாநிலங்களுக்கிடையே தொடர்பு கொள்வதற்கு மட்டுமே இந்தி உபயோகப்பட வேண்டியிருக்கிறது; இந்தி மற்ற மொழிகளுக்குப் போட்டியல்ல' என்றும், 'இந்திக்குப் போட்டி ஆங்கிலமே; மற்ற மொழிகளில் உள்ள வார்த்தைகளை இந்தியில் சேர்த்துக் கொள்ள வேண்டும்' என்றும் கூறி முடித்தார்.

## குடும்பக் கட்டுப்பாடு பிரச்சாரம் கூடாதாம்!

### சென்னை அரசாங்கத்தின் பிரச்சாரத்திற்குக் கண்டனம்

குடும்பக் கட்டுப்பாடு சம்பந்தமாக சென்னை அரசாங்கம் செய்து வரும் பிரசாரத்தை டாக்டர் வரதராசுலு அவர்கள் கண்டித்துள்ளார்.

"படிக்காதவர்கள் குடும்பக் கட்டுப்பாடு முறையைக் கையாளப் போவதில்லை; படித்தவர்களே அதைக் கையாளுவார்கள்; அதனால் காலப்போக்கில் அறிவாளிகளின் வர்க்கமே மறைந்துவிடும்"

என்று அவர், சென்னை எல். ஒய். எம். ஏ. கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

## நகரும் விஞ்ஞானப் பொருட்காட்சி

விஞ்ஞான சக்தியை விஞ்ஞான முறைகளால் எந்தெந்த வகையில் பயன்படுத்தலாம் என்பதைக் விளக்கும் முறையில், அமெரிக்க கல்வி—விஞ்ஞானப் பண்பாட்டு அமைப்பின் சார்பில் ஒரு நகரும் விஞ்ஞானப் பொருட்காட்சி ஏற்பாடு செய்யப்படும். இந்தப் பொருட்காட்சி டில்லியில் மக்கள் கண்டபின்னர், பல பகுதிகளில் இரண்டு ஆண்டு காலம் இந்தியாவைச் சுற்றிவரும் என்று தெரிகிறது.

அணுசக்தியின் ஆரம்பக் கட்டத்தில் இருந்துத் தொழில் நுணுக்க வளர்ச்சிகளுக்குப் பயன்படும் வரையில் போதிய விளக்கத்துடன் இந்த பொருட்காட்சி சுற்றிவருமெனக் கூறப்படுகிறது.

## கிளிஸரைன் ஏற்றுமதி

இந்தியாவிலிருந்து 1955-56-ல் ரூ. 53,94,763 மதிப்புள்ள 2,709 டன் கச்சா கிளிஸரைனும் சுத்திகரிக்கப்பட்ட கிளிஸரைனும் ஏற்றுமதி செய்யப்பட்டது என்று, வர்த்தக—உபயோகப்பொருள் உற்பத்தித் தொழில் மந்திரி, அறிவித்துள்ளார்.

## பி. அண்ட் சி. ஆலை

தி.மு. கழகத் தோழர்களுக்கு:

"தி. மு. கழகத் தேர்தல் நிதி வசூலிக்க ஆங்காங்கு தோழர்கள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றனர். கழகத் தோழர்கள் அனைவரும் நிதி தந்து ஒத்துழைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். தேர்தல் நிதி வசூலிக்க விரும்பும் ஆலைத் தொழிலாளர் 'கே. சுப்பிரமணி, 30, குட்டித் தம்பிரான் தெரு, புலியந்தோப்பு' என்ற முகவரிக்குச் சென்று நன்கொடை இரசீதுப் புத்தகத்தைப் பெற்றுச் செல்லவும்.

"23—9—56 காலை 9-மணிக்கு எண் 32, ஸ்ட்ரான்ஸ் ரோட், திரு. வி. க. மறுமலர்ச்சி மன்றத்தில் (லெட்சுமி தியேட்டர் சந்து) தேர்தல் நிதிக்குழு உறுப்பினர் கூட்டம் நடைபெறும்; அதுபோது வசூலான நிதியினை சேர்ப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்"

என்று, பி. அண்ட் சி. ஆலை தி. மு. கழகத் தேர்தல் நிதிக்குழுச் செயலர் தோழர் கே. சுப்பிரமணி அறிவிக்கிறார்.

## தேதி குறிப்பிடவில்லை

புதுடில்லி, செப். 13—

இந்தியப் பாராளுமன்றம் இன்று, தேதி குறிப்பிடாமல் ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அடுத்து மீண்டும் எப்பொழுது கூடும் என்று உறுப்பினர்களுக்குத் தெரியாதது குறிப்பிடத் தக்கது.

## ஒரு வேண்டுகோள்

?—10—56-ல், சென்னை மாநிலக் கைத்தறி நெசவாளர்கள் மாநாடு கோவையில் நடைபெறும். வினோபா பாவே அவர்கள் மாநாட்டில் சொற்பொழிவாற்ற இசைந்துள்ளார். திரு. பிரகடகோடய்யா எம்.எல்.ஏ. மாநாட்டிற்குத் தலைமை வகிக்கவும், திரு. சி. இராசகோபாலாச்சாரியார் மாநாட்டை ஆரம்பித்து வைக்கவும் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கின்றனர்.

கைத்தறி நெசவாளர் சங்கங்கள் தங்கள் பிரதிநிதிகளை மாநாட்டிற்கு அனுப்பிவைக்கக் கோரப்படுகிறார்கள்.

விசைத்தறிகள்—கட்டாயப் பதிவு ஆகியவைகள் பற்றி மாநாட்டில் விவாதிக்கப்படும்.

இது சம்பந்தமான எல்லா கடிதப் போக்குவரத்துக்களும், 'ஏ. சித்தையன், தொட்டு இராமசாமி தெரு, செவ்வாய்ப் பேட்டை—சேலம்-2' என்ற முகவரிக்கு எழுதுமாறு வேண்டிக் கொள்ளப்படுகிறார்கள்.

## தஞ்சை—ஆற்காடு இணைப்புப் பாலம்

2,230 அடி நீளமுள்ள கொள்ளிடம் பாலம் 1957-ல் கட்டி முடிக்கப்படும் என்றும் இதனால் தஞ்சை மாவட்டத்திற்கும் தென் ஆற்காடு மாவட்டத்திற்கும் நல்ல தொடர்பு ஏற்படுமென்றும் வட்ட எஞ்சினீயர் அறிவித்துள்ளார்.

****************************************

தலைமை நிலையச் செய்தி :

# தேர்தல் சூழ்நிலை ஆய்வுக் குழு

★

தேர்தல் சூழ்நிலையை ஆராய்ந்தறிய திருச்சியில் நடைபெற்ற மாநில மாநாட்டில், பொதுச்செயலாளர் அவர்களால் அண்ணா அவர்களைத் தலைவராகவும், தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், ஏ. வி. பி. ஆசைத்தம்பி ஆகியோரை உறுப்பினர்களாகவும் கொண்ட தேர்தல் சூழ்நிலை ஆய்வுக்குழு ஒன்று அமைக்கப்பட்டு, மேலும் இரு உறுப்பினர்களை அக்குழுவில் சேர்த்துக்கொள்ளக் குழுத்தலைவருக்கு அதிகாரமும் அளிக்கப்பட்டது.

அதற்கேற்ப, அக்குழுவில் தோழர்கள் என். வி. நடராசன், கே. ஏ. மதியழகன் ஆகிய இருவரும் உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றனர் என்று குழுத்தலைவர் அண்ணா அவர்கள் அறிவிக்கிறார்கள்.

'அறிவகம்' சென்னை 17—9—56 } —தலைமைக் கழகம் (தி. மு. க.)

****************************************

## டில்லி குறிப்பிடும் நூல் நிலையங்களுக்கு!

### செய்திப் பத்திரிகைகளை இலவசமாகத் தரவேண்டுமாம்

புதுடில்லி, செப். 13—

'டில்லி சர்க்கார் குறிப்பிடுகிற எல்லா நூல் நிலையங்களுக்கும், செய்திப் பத்திரிகை வெளியிடுவோர் தங்கள் சொந்தச் செலவில் ஒவ்வொரு இதழும் அனுப்பி வைக்கவேண்டும்' என்று கோரும் மசோதா ஒன்றினை மத்திய கல்வி மந்திரி மாநிலங்கள் சபையில் தாக்கல் செய்திருக்கிறாராம். அப்படி அனுப்பாத பத்திரிகைகளுக்கு ரூ. 50 வரையில் அபராதம் விதிக்கலாமாம்.

## மக்கள் சபையில் மாம்பழப் பிரச்சினை!

இரயில்வே சாமான் போக்குவரத்தில் உள்ள தாமதத்தைக் குறித்து மக்கள் சபையில் நடைபெற்ற விவாதத்தின்போது, பெரோஸ் காந்தி, தனக்கு அனுப்பப்பட்ட உயர்ந்த ரக மாம்பழங்கள் ஒரு மாதகாலமாகியும் தனக்கு வந்துசேரவில்லை எனப் புகார்செய்தாராம்.

இந்த மாம்பழ விவாதத்தை அடுத்தக் கூட்டத்தில் வைத்துக் கொள்ளலாம் என சபாநாயகர் அறிவித்தாராம்.

## யோசனையிலேயே இருக்கிறதாம்!

அரிசி விலை உயர்வைத் தடுக்கும் பொருட்டு சென்னை மாநிலத்திற்கு வெளியே அரிசி போக்குவரத்துமீது கட்டுப்பாடு ஏற்படுத்துவது குறித்து சென்னை அரசாங்கம் யோசித்துக்கொண்டிருப்பதாக கனம் காமராசர் அறிவித்துள்ளார்.

இந்தக் கட்டுப்பாட்டின் காரணமாக சென்னை மாநிலத்திற்குள் அரிசிப் போக்குவரத்திற்கு எந்த விதத் தடையும் இல்லை. மற்ற மாநிலங்களிலிருந்து — குறிப்பாக ஆந்திராவிலிருந்து வியாபாரிகள் சென்னை மாநிலத்தில் உணவுப் பொருள்களைக் கொள்முதல் செய்வதைத் தடுக்கவே இந்தக் கட்டுப்பாட்டைக் கொண்டுவர யோசிக்கப்படுவதாகத் தெரிகிறது. அறுவடையின்போது இந்த நெருக்கடியைத் தவிர்த்து, விலை ஏற்றத்தைத் தடுக்கவே இந்தக் கட்டுப்பாடு!

## மெல்போர்னில் ஒலிம்பிக் பந்தயம்

### 75 நாடுகள் கலந்துகொள்ளும்

இந்த ஆண்டு 16-வது ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகள் மெல்போர்னில் நடைபெறும்; அதில் கலந்துகொள்ள 75 நாடுகளிலிருந்து விளையாட்டு வீரர்கள் வந்து பங்கு கொள்வார்கள் எனத் தெரிகிறது.

## தஞ்சை மாவட்ட சட்டசபைத் தொகுதிகள்

புதிய மாறுதலின்படி 4 இரட்டை உறுப்பினர் தொகுதிகளுக்கு 12 ஒற்றை உறுப்பினர் தொகுதிகளும், 16 பொதுத் தொகுதிகளும் 4 தாழ்த்தப்பட்ட தொகுதிகளும் இருக்குமென்று தஞ்சை மாவட்டக் கலெக்டர் அறிவித்துள்ளார்.

# செய்திச் சுருள்

★

## திருச்சி தொழிற்சங்கத் தேர்தல்

திருச்சி, செப். 9—

திருச்சி பழரச பான, பொதுத் தொழிலாளர் சங்க பொது உறுப்பினர் கூட்டம் 9—9—56 மாலை 7 மணிக்கு, திருச்சி திராவிடப் பண்ணை மாடியில், தோழர் ஏ. முஸ்தபா தலைமையிலும், கே. பெருமாள் முன்னிலையிலும் நடைபெற்றது. சோடா தொழிலாளர்களின் குறைகளைப் பற்றி தோழர் எஸ். ஜி. கிருஷ்ணன் பேசியபின், மேற்படி சங்கத்தின் செயலாளராகத் தோழர் எம். எஸ். மணி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## சென்னை—தூனை ஊ. பு. அ. சௌந்திரபாண்டியனார் நினைவுப் படிப்பகம்

9—9—56-ல் மேற்படி படிப்பக அவசரச் செயற்குழுக் கூட்டம் நடைபெற்றபோது, திராவிட நாடு பிரிவினை நாளும், படிப்பக மூன்றாம் ஆண்டுவிழாவும்சேர்த்து 23-9-56ல் விழாப் பொதுக்கூட்டம் நடத்துவதெனவும், பழைய நிர்வாகிகளிடமிருந்து புதிய நிர்வாகிகளிடம் பொறுப்புகள ஒப்படைக்கப்பட்டு, மேலும் மூன்று புதிய உறுப்பினர்களைச் செயற்குழுவில் சேர்த்துக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## சிவகங்கை பாண்டியன் நினைவுப் படிப்பக 2-வது ஆண்டு விழா

9—9—56 மாலை 7 மணியளவில் மேற்படி ஆண்டு விழாப் பொதுக்கூட்டம் அரண்மனை வாயில் முன்பு தோழர் கு. சுப்பிரமணியன் தலைமையில் நடைபெற்றது. தோழர் கி. மனோகரன் 'பொதுத் தேர்தலும் ஜனநாயகமும்' என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார். கூட்ட ஆரம்பத்தில் தோழர் கி. மனோகரன் தந்தையார் இயற்கையெய்தியமை குறித்து அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## சென்னை—இராயபுரம் தமிழ் வளர்ச்சி மன்றம்

14-9-56 மாலை 7 மணிக்கு மேற்படி மன்ற நிர்வாகக் குழுத் தேர்தல் தோழர் இரா. தங்கராசன் தலைமையில் நடைபெற்றது.

தலைவர்: இரா. தங்கராசன், செயலாளர்: எம். டி. எஸ். அயமணி; துணைச்செயலாளர்: க. இராமச்சந்திரன்; பொருளாளர்: அ. தர்மன்; செயற்குழு உறுப்பினர்கள்: த. நாயகன், இ. வி' இராசன், மோகன், ப. கயலன்பன், த. பெ. தாசன், கு. சந்திரன், இ பி. இராசன், தோழர் ஆர். பாஸ்கரன் பாதுகாப்பாளராக நியமிக்கப்பட்டார்.

## பம்பாய் சௌந்திரபாண்டியனார் பகுத்தறிவு மன்றம்

8—9—56 மாலை பம்பாய்—தாராவி 'அன்பக'த்தில், மேற்படி மன்றத்தின் புத்தாண்டு நிர்வாகிகள் தேர்தல் தோழர் எஸ். செல்லதுரை தலைமையில் நடைபெற்றது. செயலாளர் : மா. இரா. குறள்தாசன்; துணைச்செயலாளர் : எஸ். செல்லதுரை; பொருளாளர் : சா. தர்மராசன்; செயற்குழு உறுப்பினர்கள் : பி. சாமிநாதன், மா. இரா. ஏ. ரெத்தினசாமி, டி. வி. துரை, வி. டி. சாமி, எம். செல்லப்பா, எம். ஞானையா.

# திராவிட நாடு விடுதலை நாள் பொதுக்கூட்டங்கள்

★

## கல்லக்குடி :

18—9—56 மாலை 6-மணிக்கு, பிள்ளையார் கோயில் முன்னிலையில், தோழர் அ. தம்புசாமி தலைமையில் நடைபெறும்; தோழர்கள் சி. பி. சிற்றரசு, அன்பில்-தர்மலிங்கம், எம். எஸ். மணி, எஸ். ஜி. கிருஷ்ணன், செங்குட்டுவன் ஆகியோர் பேசுவர்.

## பரந்தூர் :

19—9—56 மாலை, செங்கற்பட்டு மாவட்ட தி. மு. க. செயலாளர் தி. ந. சம்பந்தம் தலைமையில் நடைபெறும்; தோழர்கள் மு. கருணாநிதி, சி. வி. எம். அண்ணாமலை, டி.வி. நாராயணசாமி ஆகியோர் பேசுவர்.

## கருங்குளம் :

19—9—56 இரவு 7-மணிக்கு, வ. உ. சி. திடலில், தோழர் மு. மதியரசு தலைமையில் நடைபெறும்; தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், சு. வன்னியப்பெருமாள் பேசுவர். மாலை 4-மணிக்கு மாபெரும் ஊர்வலம் நடைபெறும்.

## ஆத்தூர் :

19—9—56 மாலை 6-மணிக்கு, சந்தைப்பேட்டையில், தோழர் பி. எம். ரெங்கசாமி தலைமையில் நடைபெறும்; பேராசிரியர் க. அன்பழகன், தோழர்கள் எம். பி. சுப்பிரமணியம் எம்.எல்.ஏ., எம்.குப்புசாமி ஆகியோர் பேசுவர்.

## சென்னையில் தடையுத்தரவு

சென்னை, செப் 15—

சென்னை சட்டசபை—மேல்சபை முன்பும், அதனைச் சுற்றியுள்ள பொதுஇடங்களிலும் கூட்டங்கள், ஊர்வலங்கள் நடத்தக்கூடாது என போலீஸ் கமிஷனர் தடையுத்தரவு பிறப்பித்துள்ளார். இந்தத் தடையுத்தரவு செப். 17-ம் தேதிமுதல் 14 நாட்களுக்கு இருக்கும்.

வரும் 21-ந்தேதியன்று தமிழரசுக் கழகத்தினர் எல்லைத் தகராறு பிரச்சினையையொட்டி சட்டசபை முன்பு கிளர்ச்சி செய்ய முடிவு செய்ததை ஒட்டியே இந்தத்தடையுத்தரவைப் பிறப்பித்திருக்கிறார்.

## காங்கிரசை வெறுப்பவர்களே அதிகம்!

'எதிர்க் கட்சிகள் எப்படியிருந்த போதிலும், மொத்தத்தில் காங்கிரசை வெறுப்பவர்களே அதிகமாக இருக்கின்றனர்' என்று மேற்கு வங்க பி சோ. கட்சித் தலைவர் குறிப்பிட்டுள்ளார்.


************************************

திராவிட நாடு விடுதலை (பிரிவினை) நாள்

# மாபெரும் கூட்டம்

★

18—9—56 செவ்வாய் மாலை 5-30 மணிக்கு

சென்னை

கான்ரான்ஸ்மித் நகர் (திரு.வி.க.) திடலில்

★

## அண்ணா

| | |
|---|---|
| என். வி. நடராசன் | மு. கருணாநிதி |
| கே. ஏ. மதியழகன் | காஞ்சி-கல்யாணசுந்தரம் |
| சத்தியவாணி முத்து | அலமேலு அப்பாதுரை |
| தில்லை-வில்லாளன் | ஏ.கோவிந்தசாமி எம்.எல்.ஏ. |
| காஞ்சி—மணிமொழியார் | டி. சண்முகம் எம்.எல்.ஏ. |
| டி. கே. பொன்னுவேலு | சுப்பிரமணியம் எம்.எல்.ஏ. |
| ஆர். எஸ். பாண்டியன் | என். ஜீவரத்தினம் |
| அரங்கண்ணல் | கோகுலகிருஷ்ணன் |

ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்

—தலைமைக் கழகம் (தி. மு. க.)

************************************


# கம்யூனிஸ்டுகளின் சுயசிந்தனையற்ற போக்கு

## நம்பூதிரி பத் தரும் விளக்கம்

எர்ணாகுளம், செப். 15—

சிறு சிறு தேவையான மாற்றங்களை அனுமதித்த போதிலும் ரஷ்யாவில் உருவாக்கப்பட்டிருக்கிற ஒரு அரசு அமைப்பைப்போன்ற ஒன்றினால் மட்டுமே இந்தியாவில் சோஷலிசத்தை நிர்மாணிக்க முடியும் என்று நாங்கள் திடமாக நம்பிக்கொண்டிருந்தோம்.

"சீனு, கிழக்கு ஐரோப்பா, மற்றும் சில நாடுகளில் சோஷலிசத்தை அடிப்படையாகக் கொண்டு நிகழ்ந்த மாற்றங்களைக் கண்ணுற்றபோது, இந்த எண்ணத்தைக் கைவிட வேண்டியதாயிற்று.

"எனவே, இங்கு இப்போது நிலவிக் கொண்டிருக்கிற சூழ்நிலைகளுக்கு ஒப்ப, சோஷலிச நிர்மாணத்திற்காகப் பாடுபடும் இதர கட்சிகளுடன் சேர்ந்து ஒத்துழைத்து, ஒரு சோஷலிச அமைப்பை நிர்மாணிக்க முயற்சிக்க வேண்டுமென்பதை உணருகிறோம்.

"இரண்டாவதாக, ரஷ்யாவில் நடைபெறுபவை எல்லாம் சரியானவைதான் என்று எண்ணிக்கொண்டிருந்தோம் ; ரஷ்யாவின் செயல்களில் குறை—நிறைகளைக் கூறுவோரை ரஷ்யாவின் விரோதிகள் என்று கூறிக்கொண்டிருந்தோம்.

"தூக்கி எறியப்படும் ஆட்சியாளர்களுக்கு எதிராக உபயோகிக்கப்படும் அடக்குமுறை ஆயுதங்கள், உண்மையாகவே சோஷலிச அமைப்பிற்காகப் பாடுபடுகிற—ஆனல் தவருன வழி காட்டப்பட்டுவிட்டவர்களையும் பாதிக்கும் என்பதை உணராமல் போய்விட்டோம்.

"இதன் விளைவாக, ரஷ்யாவைக் குறைகூறுவோர் எல்லாம் முதலாளிகளின் ஏஜெண்டுகள் என்றும், அவர்கள் முதலாளித்துவ சனநாயகத்தைக் காப்பாற்றுவதற்காக ரஷ்ய சோஷலிச முறையைக் கவிழ்ப்பதற்குத் திரைமறைவில் சதி செய்கிறார்கள் என்றும் நாங்கள் கூறிக்கொண்டிருந்தோம்.

ஆனல் இப்போது, சனநாயகக் கோஷங்களை எழுப்பிக்கொண்டு ரஷ்ய முறையைக் கண்டிப்போர்களுக்கும், ரஷ்ய முறையை ஏற்றுக்கொள்கிற நேரத்திலேயே அதில உள்ள குறைகளைக் களைய வேண்டும் என்று கூறுவோர்களுக்கும் உள்ள வேறுபாட்டினை உணருகிறோம். இரண்டாவது கூறப்பட்டவர்களுடன் கைகோர்த்துக்கொள்ளலாம் என்றும் கருதுகிறோம்,"

—என்பதாக, அகில இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் 'உச்சாணித் தலைவர்'களுள் ஒருவர் என வர்ணிக்கப்படும் ஈ. எம். எஸ் நம்பூதிரி பத் என்பார், கேரள கம்யூனிஸ்டுக் கட்சியின் ஏடான 'நவஜீவன்' என்ற இதழில் எழுதியிருக்கிறார் எனத் தெரியவருகிறது.

'கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் எங்கள் கொள்கைகளின் இரு அம்சங்களில் மகத்தான தவறு செய்துவிட்டோம்' என்று துவங்கி, அவர் மேற்கண்டவாறு எழுதியிருப்பது, கம்யூனிஸ்டுகளின் கொள்கைக் குழப்பத்திற்கும், சுய சிந்தனையற்ற போக்கிற்கும் விளக்கம் தருவதாக உள்ளது.

## 'முற்போக்காளர்' கவனத்திற்கு !

"...அரசாங்கத்தைப் பொறுத்த மட்டில் மத விவகாரங்கள் தனி மனிதர்களின் சொந்த விவகாரமாகக் கருதப்பட வேண்டும் என்று நாம் கோருகிறோம். மதத்தைப்பற்றி அரசாங்கம் எவ்வித கவலையும் எடுத்துக்கொள்ளக்கூடாது. மதக் கழகங்களுக்கும் அரசாங்கத்திற்கும் எவ்விதமான இணைப்பும் இருக்கக் கூடாது.

"ஒவ்வொருவரும் தாம் விரும்பும் எந்த ஒரு மதத்தையும் பின்பற்றுவதறகும், எந்த மதத்திலும் சேராமல் ஒதுங்கி நிற்பதற்கும்—அதாவது, நாத்திகனுயிருப்பதற்கும்—உரிமை இருக்க வேண்டும். பொதுவாக எந்த ஒரு சோஷலிஸ்டும் நாத்திகனுகவே இருக்கமுடியும்..."

இவ்வாறு லெனின் ஆய்வுரை வழங்கியிருப்பதாக, ரஷ்யாவில் 'மதச் சுதந்திரம்' என்ற தலைப்பில், என். சமோக்வலோவ் என்பார் எழுதிய கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டிருப்பதாக 'டாஸ்' அறிவிக்கிறது.

## நிலச் சீர்திருத்த மசோதாவிற்குச் சவக் குழி ?

"பொதுத் தேர்தல் முடிந்த பிறகு அமைக்கப்படும் புதிய மந்திரி சபையே நிலச் சீர்திருத்தத்தை பற்றிய மசோதாவை கொண்டு வரும்"

என்று நிதி அமைச்சர் சுப்பிரமணியம், கரூர் தாலுகா உழவர்கள் மாநாட்டில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

## ஆதாரமற்றதாம் !

பாகிஸ்தான் முதலமைச்சர் பதவியை இராஜிநாமாச்செய்து வெளியேறிய முகமதலி, முஸ்லிம் லீக் தனக்குப் போதிய ஒத்துழைப்புத் தரவில்லை என்று குற்றம் சாட்டியதை, 'ஆதாரமற்றது' எனப் பாகிஸ்தான் முஸ்லிம் லீக்கின் செயற்குழு அறிவிக்கிறது.

## பட்டினிப் பிணங்கள் !

"பஞ்சத்தின் காரணமாகவும், வெள்ளத்தின் காரணத்தாலும், பீகார் மாகாணத்தில் அலிபூர் பகுதியில் ஏராளமான மக்கள் வறட்சியால் பட்டினிகிடந்து செத்து மடிந்தார்கள்"

என்று அம்மாநில காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர் அர்பாஜ் நாராயண சிங் குறிப்பிட்டுள்ளார்.

## அரிசியின் விலை இறங்கிவிட்டதாம்

மத்திய மந்திரியின் கூற்று

திருவனந்தபுரம், செப். 16—

வெளிநாடுகளிலிருந்து அரிசி இறக்குமதி செய்யப்பட்டிருப்பதால் மீண்டும் கட்டுப்பாடு தேவையில்லை என்றும், நிலைமை திருப்திகரமாக உள்ளது என்றும், தென் இந்தியாவில் அரிசிவிலை குறைந்துவிட்டது என்றும் மத்திய மந்திரி கிருஷ்ணப்பா கூறியிருக்கிறார்.

## பாகிஸ்தானுக்கு 30,000 டன் உணவுப்பொருள்

இரண்டு நாட்களுக்கு முன்பு இந்தியாவிடம் உணவுப் பொருள் உதவி வேண்டுமென்று பாகிஸ்தான் கேட்டிருந்ததல்லவா? இன்று இந்திய அரசாங்கம் 30,000 டன் உணவுப் பொருள்களை பாகிஸ்தானுக்கு அனுப்ப இசைந்துள்ளதாகத் தெரியவருகிறது.

## மரியாதை வாரம்

சென்னை, செப். 17—

வாடகைக் கார் ஓட்டும் தொழிலாளர் சங்கத்தினர் இந்த மாதம் இறுதியில் 'மரியாதை வாரம்' ஒன்று மேற்கொள்ள முடிவு செய்திருக்கின்றனராம்.

## கண்டனக் கூட்டம்

18—9—56 மாலை 6 மணிக்கு, சென்னை - இராயபுரம், பனைமரத் தொட்டி அம்மன் கோயில் எதிரில், சென்னை மாநில சர்க்கார் மீன் இலாகாவினர் நடவடிக்கைகளைக் கண்டித்து சென்னை நகர மீனவர்கள் சார்பில், தோழர் என். சீவரத்தினம் தலைமையில் ஒரு கண்டனப் பொதுக் கூட்டம் நடைபெறும்.

தோழர்கள் ஏ. இரத்தினம் எம். எல். ஏ., கே. குப்புசாமி, எம்' ஆர். சி. இராமச்சந்திரன் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

## ஆலாந்துறை கிராமத்தில் தி. மு. க. துவக்க விழா

19—9—56ல், கோவை மாவட்டம் தொண்டாமுத்தூர் பிர்க்கா ஆலாந்துறை கிராமத்தில், தி. மு. கழகத் துவக்க விழா நடைபெறும். தோழர்கள் கோவை—செழியன், சி. டி. தண்டபாணி பேசுவர்.

## வெங்கிடம்மா பேட்டையில் தி.மு.கழகத் துவக்க விழா

19—9—56ல், தோழர் வி. விநாயகத்தான் தலைமையில், மேற்படி துவக்க விழா நடைபெறும் ; தோழர்கள் ஆர். இராசு, கே. மாரியப்பன், டி வி. வாசு, எஸ் எஸ். சலாம் ஆகியோர் பேசுவர்.

ஆத்தூர் வட்டத்தில்

## க. அன்பழகன், எம். பி. சுப்பிரமணியம்

சுற்றுப்பயணம்

18-9-56 : காலை 9 மணிக்கு, பெத்தநாயக்கன் பாளையம் சீத்தார் விளைவு நாள்.

" மாலை 6 மணிக்கு, சின்ன கிருஷ்ணபுரம் தி. மு. கழகத் துவக்க விழாப் பொதுக்கூட்டம்.

19-9-56 : காலை 9 மணிக்கு, புனவாசல் திருக்குறள் கழகத் துவக்க விழா.

" மாலை 6 மணிக்கு, ஆத்தூர் பொதுக்கூட்டம்.

# வேலையில்லாக் கொடுமையை மிகுவிக்கின்றனர்

## 2,500 தற்காப்பு இலாகா ஊழியர்களுக்கு சீட்டு

கிர்கி, தேஹு இராணுவத் தளவாட கிடங்குகளில் பாதுகாப்பு சிப்பந்திகளாகப் பணிபுரிந்தவர்கள் சுமார் 2,500 பேர் இன்று வேலையிலிருந்து நீக்கப்பட்டனர்.

### கண்டன ஊர்வலம்

ஆட்குறைப்பு செய்யப்பட்டவர்கள் யாரும் தங்கள் ஊதியத்தைப் பெறவில்லை; எல்லோரும் ஒன்று கூடி நகர முக்கிய பகுதிகளில் ஊர்வலமாகவந்து பொதுக்கூட்டம் நடத்தி, அரசாங்கத்தின் போக்கைக் கண்டித்தனர் என்று தெரியவருகிறது

# கோவை - சி. எஸ். இரத்தினசபாபதி (முதலியார்) மறைவு

சென்னை, செப். 15—

கோவை-சி. எஸ். இரத்தினசபாபதி (முதலியார்) அவர்கள் தமது 78-வது வயதில் நேற்று மாரடைப்பால் இயற்கையெய்தினர் என்ற செய்தி அறிவிக்க மிக வருந்துகிறோம்.

அவர், கோவை நகரசபைத் தலைவராகவும், கோவை மாவட்டக் கழகத் தலைவராகவும் 15 ஆண்டுகளுக்கு மேலாகப் பதவி வகித்து, கோவை மாவட்ட மக்களுக்கும் குறிப்பாகக் கோவை நகர மக்களுக்கும் சிறப்பான பணிகள் பல ஆற்றியவராவார்.

கோவை ஆர். எஸ்.-புரம், நகர மக்களுக்கு அவர் ஆற்றிய பணியின் காரணமாக அவரது பெயரால் வழங்கப்படுவதாகும்.

அவரை இழந்து வாடும் அவரது குடும்பத்தாருக்குக்கோவைநகர மக்களுடன் நாமும் நமது ஆழ்ந்த அனுதாபங்களை உரித்தாக்குகிறோம். (ஆ.-ர்.)

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம் ஏ.

